REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ 'PHONE : 55630

# நம் நாடு

தி.மு.க.தினஇதழ் ஆசிரியர்..அண்ணதுரை

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

வெளியூர் : தை 26உ செவ்வாய் (8—2—55) [இதழ் 202

[illegible] 25உ திங்கள் (7—2—55) ★ ★

## பல்கலைக் கழகங்கள் அபிவிருத்தி

காகபுரி, பிப். 5—

அடுத்த ஆண்டில், நாடெங்கிலுமுள்ள பல்கலைக் கழகங்களை அபிவிருத்தி செய்வதற்காக, பல்கலைக் கழக மானியக் குழுவினர், சுமார் ரூ. 5 கோடி செலவிட உத்தேசித்துள்ளனர் எனத் தெரிய வருகிறது. கடைமுதல் ஆண்டில் நூல் நிலையங்கள் ஏற்படுத்தவும், ஆராய்ச்சிகள் நடத்தவும், கல்வி சாதனங்கள் வழங்கவும் பல்கலைக் கழக மானியக் குழு ரூ. 1½ கோடி வழங்க இருக்கிறது என்று மேற்படி குழு தலைவர் எ. மத்தாய் தெரிவித்திருக்கிறாராம்.

அடுத்த ஆண்டில் செலவிடப்படவிருக்கும் ரூ. 5 கோடியில் ரூ. 3½ கோடி, காசி, அலிகார், விசுவபாரதி, டில்லி பல்கலைக் கழகங்களுக்கும், மீதியுள்ள 1½ கோடி ருபாய் நாட்டிலுள்ள மற்ற 27 பல்கலைக் கழகங்களுக்கும் வழங்கப்படும்.

# ஆந்திரத்தில் தேர்தல்

## தி. மு. கழகத்தினருக்கு வேண்டுகோள்

★

ஆந்திர மாநிலத்தில் தேர்தல் நடைபெற இருக்கிறது.

மொழிவழி அரசுக் கொள்கைப்படி தமிழருக்கு உரியதான பகுதிகள், டில்லி சர்க்காரின் போக்கினால் ஆந்திர மாநிலத்தில் இதுபோது இணைத்துவைக்கப்பட்டிருக்கின்றன.

இந்த அநீதியைக் கண்டித்தும், தமிழரின் உரிமையை வலியுறுத்தியும் நமது கழகம் கருத்துரை வெளியிட்டதுடன் நில்லாமல், இயன்ற அளவு கிளர்ச்சியும் நடாத்திற்று.

தி. மு. கழகம், ஆந்திரர்—கேரளர்—கன்னடர் எனும் மும்மொழியினரையும் தமிழருடன் ஒன்றுபட வேண்டிய திராவிட இனத்தவர் என்ற கருத்துடனும், மொழிவழி தமிழகம், ஆந்திரம், கேரளம், கர்நாடகம் அமைந்து, பிறகு இவ்வழி அந்நான்கும் வடவர் ஆதிக்கத்தினின்றும் விலகி ஓர் கூட்டாட்சி அமைத்தல் வேண்டும்—அதுவே திராவிட நாடு எனும் இலட்சியம்—என்ற தீர்மானத்துடனும் பணியாற்றி வருகிறது.

எனவே, ஆந்திரத் தோழர்களிடம் பகை உணர்ச்சி அறவே கூடாது என்று விளக்கமளித்து, பூசல் எழாத வகையில் பிரச்சினையைக் கவனிக்க வேண்டும் என்பதை வலியுறுத்தி வந்திருக்கிறது.

தமிழரின் நியாயமான உரிமையைப் பறித்துக் கொள்கின்றனர்—என்று, ஆந்திரரிடம் ஆத்திரப்படுவதில் அர்த்தமில்லை.

ஓர் அக்கிரம ஏற்பாட்டை மத்திய சர்க்கார் செய்திருப்பதே இந்த 'அமளி'க்குக் காரணம் என்பதை எடுத்துக் காட்டி வருகிறது.

மொழிவழி அரசுத் திட்டத்தை ஆதரிப்போரில், திராவிட நாடு இலட்சியத்திலே நம்பிக்கையற்றவர்கள்—நையாண்டி செய்பவர்கள்—'வடவர் ஆதிக்கம், மத்திய சர்க்கார் பிடி என்பனவெல்லாம் பொருளற்றவை,' என்று கூறிடும் போக்கினரும் உள்ளனர்.

மொழிவழி அரசுத் திட்டத்திலே நமக்குள்ள பற்று காரணமாக, அந்தத் திட்டத்தை வலியுறுத்துவோர் அனைவருடனும் நாம் ஒத்துழைக்கிறோம்.

இப்போது நடைபெறும் தேர்தலில், தமிழர்கள் உரிமை கொண்டாடத்தக்க வட்டத்திலே, தமிழர்களின் சார்பில் நடைபெறும் வடக்கெல்லைப் பாதுகாப்புக் குழு, நான்கு தொகுதிகளில் அபேட்சகர்களை நிறுத்தியிருக்கிறது.

இந்தத் தேர்தலில், தமிழர்கள் இந்த 4 தொகுதிகளில் தேர்ந்தெடுக்கப்பட்டால், தமிழரின் உரிமைப் பிரச்சினைக்குப் புதியதோர் வலிவு நிச்சயமாக ஏற்படும் என்று தி. மு. கழகம் உறுதியாக நம்புகிறது.

எனவே, இந்தத் தேர்தலில், இந்தத் தொகுதிகளில் உள்ள தி. மு. கழகத்தினர், மொழிவழி அரசுத் திட்டத்தின்படி, தமிழ் அபேட்சகர்களையே ஆதரித்து, வெற்றி தேடித் தர வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இது சம்பந்தமாக, நடத்தப்பட்ட ஆலோசனைக் கூட்டத்தில், வடாற்காடு மாவட்ட தி. மு. க. செயலாளர் தோழர் ஏ. எல். சி. கிருஷ்ணசாமி, சித்தூர் தோழர்கள் கேசவன், முனுசாமி, பொதட்டூர் பேட்டைத் தோழர்கள் ராமசாமி, கணேசன், கோதண்டன் ஆகியோரின் கருத்தையும், பிறகு திருத்தணி தோழர் ரஷீத் அவர்களின் கருத்தையும் கேட்டறிந்தேன். அவர்களும், இந்தத் தேர்தலில் தமிழர்கள் " கட்சிப் பூசல்களை மறந்து ஒற்றுமைப்பட்டு, வடவெல்லைப் பாதுகாப்புக் கமிட்டியார் எடுத்துக் கொண்டிருக்கும் முயற்சிக்கு ஆதரவு திரட்டித் தந்து, தமிழர்களை வெற்றி பெறச் செய்து, அதன் மூலம், மொழி வழி அரசுக் கொள்கைக்கு வெற்றி கிடைத்திடச் செய்யவேண்டும் " என்று எடுத்துக் கூறினர். அந்தக் கருத்துப்படியே, ஆலோசனைக் கூட்டத்தில், தமிழ் அபேட்சகர்களை ஆதரித்து, தி. மு. க. பணியாற்றுவது என்று முடிவு செய்யப்பட்டது.

பொதுவாக இந்தப் பகுதியில் மொழி வழி அரசுப் பிரச்சினைக்காகவும், சிறப்பாக இந்தத் தேர்தல் சம்பந்தமாகவும் ஆர்வத்துடன் பணியாற்றி வரும் தோழர் கே. விநாயகம், எம். எல். ஏ., அவர்கள் இதுகுறித்து இருமுறை என்னைச் சந்தித்துப் பேசினார்.

தி. மு. கழகத்தின்மீது கண்டனக் கணை ஏவியவர், தோழர் விநாயகம் என்பதை, மொழி வழிப் பிரச்சினை முன்னணியில் இருக்கும் இந்த நெருக்கடியான நேரத்தில் நினைவிற் கொள்வது, பெருந்தன்மையுமல்ல, அரசியல் யூகமுமாகாது என்று தீர்மானித்தேன். ஆலோசனைக் கூட்டத்திலும், நண்பர்கள் இதே கருத்தை வெளியிட்டனர்.

எனவே, சித்தூர், பொதட்டூர்பேட்டை, திருத்தணி, ஏகாம்பரகுப்பம், வேப்பஞ்சேரி, நகரி ஆகிய வட்டங்களில் உள்ள தி. மு. கழகக் கிளைகளை, இந்தத் தேர்தலில், தமிழ் அபேட்சகர்களுக்கு ஆதரவு திரட்டித் தந்து வெற்றி பெறச் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

## தமிழரின் உரிமை! ★ மொழிவழி அரசு!

இவைதான் தி. மு. கழகத் தோழர்கள் வலியுறுத்த வேண்டியவை.

தி. மு. கழகத் தோழர்கள் எக்காரணம் கொண்டும் சொல்லாலோ, செயலாலோ ஆந்திரத் தோழர்களிடம் பகை உணர்ச்சி காட்டக்கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன்.

நெருக்கடியான நேரத்தில், கொள்கைக்கு இழுக்கு ஏற்படாதபடியும், கழகத்தின் நற்பெயருக்குக் களங்கம் உண்டாகாதபடியும் தி. மு. கழகத் தோழர்கள் நடந்து கொண்டு, வெற்றிக்குப் பாடுபடுவார்கள் என்று நம்புகிறேன்.

அன்பன்,

சி. என். அண்ணதுரை,
பொதுச்செயலாளர், திராவிட முன்னேற்றக் கழகம்

தலைமை நிலையம்,
'அறிவகம்,'
சென்னை—13

************************************************

# பாகிஸ்தான் குடியரசு

## அமெரிக்க மாடலில் இருக்குமாம்

பாகிஸ்தானின் எட்டாவது ஆண்டுவிழா நடைபெறும் ஆகஸ்டு 14-ம் நாள், பாகிஸ்தான் ஒரு குடியரசுநாடு என்று அறிவிக்கப்படுமாம்.

பாகிஸ்தான் அமெரிக்க முறையில் குடியரசாக இருக்குமென்று சர்க்கார் உயர்தர அதிகாரி ஒருவர் குறிப்பிட்டிருக்கிறார்.

இஸ்லாமியப் பண்பாட்டின்படியும், நிலையான சர்க்கார் இருப்பதன் அவசியம் பற்றியும் பாகிஸ்தான் அமெரிக்க முறையைக் கையாளுகிறது என்று அந்த அதிகாரி குறிப்பிட்டார்.

அமெரிக்க முறைப்படி, ஜனாதிபதி, மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். சர்க்கார், பாராளுமன்றத்தின் தயவை நம்பியிருக்காமல், குறிப்பிட்ட காலத்திற்கு நிர்வாகத் தலைவராக ஜனாதிபதி தேர்ந்தெடுக்கப்படுகிறார். அவரை, பாராளுமன்றம் பதவியிலிருந்து நீக்க முடியாது.

கிழக்கு, மேற்கு என்ற இரண்டு சுயாட்சி மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒரே ஜனாதிபதியின் கீழ் குடியரசு பாகிஸ்தான் விளங்குமாம். சர்க்கார் இதற்கான ஏற்பாடுகள் அனைத்தையும் செய்து முடித்துவிட்டதாம்.

ஜனாதிபதிக்கு உதவ மந்திரி சபை ஒன்று இருக்குமென்றும், இந்த மந்திரி சபைக்கு அதிக அதிகாரங்கள் இருப்பதுடன், அது சட்டசபைக்குப் பொறுப்பானதாக இருக்காது என்றும் அந்த அதிகாரி குறிப்பிட்டிருக்கிறார்.

அடுத்த நான்கு மாதங்களில் பாகிஸ்தானுக்கான அரசியலை வகுக்கவும், குடியரசின் திட்டங்களைத் தீர்மானிக்கவும் கவர்னர்-ஜெனரல் அரசியல் சபை ஒன்றைக் கூட்டுவார் என்று அந்த அதிகாரி மேலும் தெரிவித்தார்.

# மேற்குப் பாகிஸ்தான்

## லாகூர் தலைநகரமாகும்

இப்போது அமைக்கப்படவிருக்கும் மேற்கு பாகிஸ்தானின் தற்காலிகத் தலைநகராக லாகூர் இருக்குமென்று 'டான்' பத்திரிகை செய்தி ஒன்றை வெளியிட்டிருக்கிறது.

முதல் பத்து ஆண்டு காலத்திற்கு லாகூர் தற்காலிகத் தலைநகராக இருக்குமாம் அதற்குள் நிரந்தரத் தலைநகரம் பற்றி முடிவு செய்யப்படுமாம்.

# திரு-கொச்சி மந்திரி சபையின் எதிர்காலம்!

திருவனந்தபுரம், பிப். 7—

பட்டம் தாணுவின் மந்திரி சபை மீது கொண்டுவரப்பட்டிருக்கும் இரண்டு நம்பிக்கையில்லாப் பிரரேபனைகளில் முதலாவதாக டி. எஸ். இராமசாமியின் பிரரேபனை பிப்ரவரி திங்கள் 8-ந் தேதியன்று விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படும்.

திரு-கொச்சி சட்டசபையின் இப்போதைய கூட்டம் 12-ந் தேதி வரை நடைபெறும்.

# மாணவர் அறப் போர்

## சாகும்வரை மூன்று பேர் உண்ணாவிரதம்

பரோடா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த மூன்று மாணவர்கள், வேலை நிறுத்தம் செய்துள்ள எழாவது நாளில் உண்ணாவிரதம் ஆரம்பித்திருக்கிறார்கள்.

மாணவர்கள் கழகத் தலைவர் மனோகர் ஆச்சாரியா, செயலாளர் குலன்பட்டேல், ரூசி என்ற மூவரும் உண்ணாவிரதம் ஆரம்பித்திருக்கின்றனர். சமூகப் பிரிவிலிருந்து இரண்டு மாணவர்கள் நீக்கப்பட்டதை எதிர்த்தே இவர்கள் உண்ணாவிரதம் ஆரம்பித்துள்ளனர்.

இதைக் குறிப்பிட்டு மாணவர்கள் நீண்டதோர் ஊர்வலம் ஒன்றை நடத்தினார்கள்.

உண்ணாவிரதமிருக்கும் மாணவர்கள், கூட்டமொன்றில் பேசுகையில், மாணவர்களின் கோரிக்கை ஒப்புக்கொள்ளப்படாவிட்டால் தாங்கள் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கப் போவதாகத் தெரிவித்தனர்.

இந்த மாணவர்களின் கோரிக்கையை ஆதரிக்கும் வகையில் உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் 4,000 பேர் இன்று பள்ளிக்குச் செல்லாது அனுதாபம் தெரிவித்தனர்.

# தந்தையே மகனை சிறையிட்டார்

மத்திய பிரதேசத்தில், சிந்த்வாரா பகுதியிலுள்ள பிட்டுல் சிறையிலிருந்து தப்பிய இளைஞன் ஒருவனை அவனது தந்தையே மீண்டும் சிறைக்கு அனுப்பிவிட்டார்.

சிறையிலிருந்து தப்பியதும், அந்தஇளைஞன் நேராகத்தனது கிராமத்திற்குச் சென்று வீட்டில் ஒளிந்துகொண்டான்.

சட்டத்தை மீற விரும்பாத தந்தை, தானே தன் மகனை போலீஸ் நிலையத்திற்கு அழைத்துச் சென்று அதிகாரிகளிடம் அவனை ஒப்படைத்துவிட்டாராம்.

## சிரிய மக்கள் சபையில் கட்சிகள் டைாய்!

டமாஸ்கஸ், பிப். 6—

சிரிய மக்கள் சபையில் இன்று இரண்டு கட்சிக்காரர்களிடையே சண்டை மூண்டதாக செய்தி வெளிவந்துள்ளது.

பாபுலிஸ் கட்சி, ஜனநாயக முன்னணி என்ற அந்த இரு கட்சியினரும் நாட்டில் உள்ள சில போக்குவரத்து சாதனங்களை தேசிய மயமாக்குவதற்காக சுல் மசோதா தயாரிப்பது பற்றி நடைபெற்ற காரசாரமான விவாதத்தின் போது சண்டையிட்டுக் கொண்டார்களாம்.

தலைவர் கூட்டத்தைச் சிறிது நேரம் ஒத்திவைத்து பின் அமைதி நிலவிய பிறகு தொடர்ந்து கூட்டத்தை நடத்தினாராம்.

நம் நாடு
தி.மு.க.தினஇதழ் ஆசிரியர்: அண்ணதுரை
சென்னை 7—2—1955 திங்கள்

# போகமாட்டார்கள்தான்!

கோவாவை விட்டு போர்ச்சுகீசியர்கள் உடனடியாக வெளியேற வேண்டும் என்பதற்கான காரண காரியங்களை நாம் இங்கு பன்முறை விளக்கியிருக்கிறோம். கோவா இந்தியத் துணைக்கண்டத்தின் ஒரு பகுதி என்பதையும், அந்தப் பகுதியில் அந்நியர்கள் ஆதிக்கம் கொண்டிருப்பது அநியாயமானது என்பதையும் நியாயமான போக்கும், நேர்மையான அறிவுத் தெளிவும் கொண்டவர்கள் ஒப்புக்கொண்டே ஆகவேண்டும்.

இமயம் முதல் குமரி வரை, கராச்சி முதல் கல்கத்தா வரை ஆதிக்கம் பெற்றிருந்த ஆங்கிலேய ஏகாதிபத்தியம், 'இனியும் நாம் இந்தியத் துணைக்கண்டத்தில் ஆதிக்கம்செலுத்துவது ஆகாது' என்றெண்ணி அகன்றுவிட்டது, ஏழாண்டு காலத்திற்குமுன்!

அதைப்போலவே பிரெஞ்சு ஏகாதிபத்தியமும், தனது கைவசமிருந்த புதுவை, காரைக்கால் போன்றவற்றின் ஆதிக்க அதிகாரத்தை சென்ற ஆண்டில் இந்தியப் பேரரசிடம் ஒப்படைத்துவிட்டு வெளியேறிவிட்டது.

இந்த இரண்டு வலிமை மிகுந்த ஏகாதிபத்தியங்களும், இனியும் இந்திய மண்ணில் தொடர்ந்து ஆதிக்கம்செலுத்த இயலாதென்ற அறிவு பெற்று வெளியேறிய பின்பும் கோவாவைவிட்டு வெளியேற போர்ச்சுகீசியர் மறுப்பது நியாயமற்றது என்பதையும் முன்பே சுட்டிக் காட்டியிருந்தோம்.

கோவா மக்கள் விடுதலை கோரி அறப்போரில் ஈடுபட்டு, உரிமையை நிலைநாட்டிக் கொள்ள மும்முரமாக முனைந்துவிட்ட பின்னும், போர்ச்சுகீசிய சர்க்கார், கோவாவை விட்டுப் போகமாட்டோம் என்று கூறுவது ஏன் என்று தெரியவில்லை.

போர்ச்சுகீசிய ஆதிபத்திய வாதிகள், கோவாவில் விடுதலை கோரி அறப்போரில் ஈடுபடும் தோழர்கள்மீது ஏவும் அடக்குமுறைக்கொடுமைகள் நாளுக்கு நாள் வளர்ந்து வருகின்றன.

கோவா, மற்றும் இந்தியாவிலிருந்து செல்லும் அறப்போர் வீரர்களை போர்ச்சுகல் சர்க்கார், இனி போர்ச்சுகலுக்கோ அல்லது அதன் ஆதிக்கப் பிடியில் சிக்கிக் கிடக்கும் ஆப்பிரிக்கப் பகுதிகளுக்கோ நாடு கடத்தப் போவதாக புதிய ஒரு சட்டத்தைக் காட்டி அறப்போர் வீரர்களை மிரட்ட முன்வந்திருக்கிறது.

இந்தச் சட்டத்தின்படி, கோவா விடுதலைக்காக நியாயமான அறப்போரில் ஈடுபடும் தோழர்களை அப்படி நாடு கடத்தினால் கடும் விளைவுகள் ஏற்படும் என்று இந்தியப் பேரரசு எச்சரிக்கை செய்திருக்கிறது.

ஒரு காலத்தே இந்தியத் துணைக்கண்டத்து மக்கள், வையத்து நாட்டிலெல்லாம் தாழ்வுற்று, வறுமை மிஞ்சி, விடுதலை தவறிக்கெட்டு, பாழ்பட்டு நின்றதென்னவோ உண்மைதான். 'ஆளுபவன் இராமனானால் என்ன, இராவணன் ஆனால் என்ன' என்று அவர்கள் எண்ணிக் கிடந்த காலமும் உண்டு; ஆனால், இன்று நிலைமை வேறு; அவர்களின் அடிமை மோகம் மடிந்து சுதந்திர தாகம் வளர்ந்து வரும் காலம் இது; இந்த உண்மையை மறந்துவிடக் கூடாது போர்ச்சுகீசிய ஆதிபத்தியம்.

அறப்போரில் ஈடுபடும் தோழர்களை நாடு கடத்தப் போவதாக போர்ச்சுகல் அறிவித்திருப்பது, அதன் ஆதிக்க வெறி உச்சம்பெற்றிருப்பதைத்தான் காட்டுகிறதே தவிர, உலகில் நடைபெறும் மாறுதல்களையொட்டிச் செல்வதாக இல்லை.

தன்னையொத்த ஒரு ஏகாதிபத்தியம்—தன்னைக்காட்டிலும் சற்று வலுமிக்க பிரெஞ்சு ஏகாதிபத்தியம் இந்தியத் துணைக் கண்டத்தில் மட்டுமல்ல இந்தோ-சீனாவிலும் கூட விவேகமுடன் நடந்து கொண்டிருக்கிறது; மற்றும் தன் ஆதிக்கத்திலிருக்கும் அல்ஜீரியா, டுனீசியா, மொராக்கோ போன்ற பகுதிகளில் பொங்கி எழுந்துள்ள விடுதலை போராட்டத்திற்கு மதிப்பளிக்க வேண்டும் என்ற எண்ணத்தைப் படிப்படியாகவாவது பெற்று வருவதைக் காண்கிறோம். ஆனால், அவை போன்ற நடைமுறை சம்பவங்கள் போர்ச்சுகீசியருக்குப் பாடம் சொல்லுபவையாக அமைந்திருந்தும்கூட, இந்தியத் துணைக்கண்டத்தில் தன் ஆதிக்கப் பிடியில் சிக்கியுள்ள கோவா பகுதியைவிட்டு வெளியேற மறுப்பது மட்டுமின்றி, அப்பகுதியில் விடுதலை கோரி அறப்போரில் ஈடுபடுபவர்களை அடக்குமுறைகளால் அடித்து நொறுக்குவதுமட்டுமல்லாமல், நாடு வேறு கடத்துவோம் என்று இறுமாப்புடன் பேசுவதும் விசித்திரமானதாகவே தோன்றுகிறது.

எந்த நியாய நிலைகளைக் காட்டி, போர்ச்சுகீசியருக்கு இங்கு ஆதிக்கம் இருக்கவேண்டும் என்று அவர்கள் நினைக்கிறார்களோ?

ஆங்கிலேயருக்காவது, இருந்தவரை ஏகமாகக் கொள்ளையடிக்கவும், சுரண்டவுமான வாய்ப்புகளும், தனது அகண்ட ஏகாதிபத்திய வாய்க்கு பெருந் தீனியும் கிடைத்தன. போர்ச்சுகீசியருக்கு கோவாவில் என்ன கிடைக்கிறது? பொன்னும் பொருளுமா? தங்கமும் வைரமுமா? எதுவும் இல்லையே—இந்திய மண்ணில் ஒரு பிடி, எங்கள் ஆதிக்கப் பிடியிலிருக்கிறது என்று சொல்லிக் கொள்ளும் போலி கௌரவத்தைத் தவிர!

'அந்த போலி கௌரவத்'தை நிலை நாட்டிக்கொள்ள, 'உங்கள் விடுதலை ஆசையை நாசமாக்க நாடு கடத்துவேன் உங்களை' என்று கூச்சலிடுவது நாகரீகமல்ல!

'உரிமை, இன்றைய உலகத்தில் மதிப்பிட முடியாத ஓர் சொத்து; அந்த உரிமையை, உம்மிடம் விட்டுவைக்க மாட்டோம்; அது எம்மிடமே இருக்கவேண்டும்; எம்மை நாமே ஆளவேண்டும்; இன்னொருவனால் ஆளப்படுகிறேன் என்ற அவல நிலை, அடிமைத்தனை நீங்க அவனியையும் எதிர்த்துப் போரிடும் ஆற்றல் எமக்கு உண்டு,' என்று சூளுரைத்துப் போர்க்களம் புகுந்திருக்கும் கோவா அறப்போர் வீரர்களின் விடுதலை வேட்கைக்கு மதிப்பளித்து, அவர்களின் சுதந்திரத் தாகத்தைத் தணிப்பதே போர்ச்சுகல் சர்க்கார் இன்று செய்ய வேண்டிய விவேகமான காரியம். இல்லாவிட்டால், 'பார்ப்போம் ஒரு கை' என்ற நிலையிலிருந்து போர்ச்சுகல் இறங்க மறுத்தால், 'கோவாவை விட்டு போகமாட்டார்கள்—அடித்துத் துரத்தினால் ஒழிய,' என்று அறப்போர் வீரர்கள் கூற வேண்டிய நிலையை அவர்களே உருவாக்கிக்கொள்ள வேண்டியவர்களாகிவிடுவர்.

## போலி புற்றுநோய் மருந்து

### இறக்குமதி செய்வதற்கு அனுமதி கிடையாது

புதுடில்லி, பிப். 5—

ஆஸ்திரேலியாவிலுள்ள சர்வதேச புற்றுநோய் ஆராய்ச்சிக் கழகத்தின் தலைவரெனப்பட்ட டாக்டர் ஹெச். ஸ்மால்பேஜ் என்பவர் "கார்சினோமைசின்" என்ற புது மருந்து ஒன்றைத் தயாரித்திருக்கிறார் என்றும், அம்மருந்து புற்றுநோயைக் குணப்படுத்தக் கூடியதென்றும் பத்திரிகைகளில் வெளியான செய்தி பற்றி ஆஸ்திரேலியாவில் விசாரித்தபோது, இம்மருந்து புற்றுநோயைக் குணப்படுத்தும் என்பதற்கு ஆதாரமே கிடையாது என்றும் மேலும், ஆஸ்திரேலியாவில் டாக்டர் ஸ்மால்பேஜ் என்பவரை தலைவராகக் கொண்ட சர்வதேச புற்றுநோய் கழகம் எதுவுமில்லையென்றும் அறிவிக்கப்பட்டதாக மத்திய சர்க்கார் சுகாதார அமைச்சர் காரியாலய அறிக்கை ஒன்று கூறுகிறது.

"கார்சினோமைசினை" இறக்குமதி செய்ய, மருந்துச் சட்டத்தின் கீழ் இறக்குமதி லைசென்சு வழங்கப்படமாட்டாதென்றும் சொந்த உபயோகத்துக்காக இம்மருந்தை இறக்குமதி செய்வதற்கும் அனுமதிக்கப்படமாட்டாது என்றும் அவ்வறிக்கையில் மேலும் காணப்படுகிறது.

## பரீட்சார்த்த குழாய் கிணறு திட்டம்

### 16மாநிலங்களில் 350 கிணறுகள் தோண்டப்படும்

நாட்டின் 16 மாநிலங்களில், 350 பரீட்சார்த்தக் குழாய்க்கிணறுகளைத் தோண்டுவதற்கான இந்திய சர்க்கார் திட்டம், நர்மதை நதிப் பள்ளத்தாக்கில் ஆரம்பமாகியிருக்கிறது. 1,500 அடி ஆழத்திற்குத் துளையிடக் கூடிய வெவ்வேறு வகைப்பட்ட துளையிடும் கருவிகள் (ஜம்போ) இந்தியாவில் இறக்குமதியாகி, நர்மதை நதிப் பள்ளத்தாக்குகளுக்கு அனுப்பப்பட்டுள்ளன.

குழாய்க் கிணறுகளைத்தோண்டுவதற்குத் தேவைப்படும் இயந்திர சாதனங்களில், 7½ லட்சம் டாலர் பெறுமான சாதனங்கள் ஏற்கனவே இறக்குமதியாகிவிட்டன மேலும் 15 லட்சம் டாலர் பெறுமான சாதனங்களை அவசரகால அடிப்படையில் சேகரம் செய்துகொள்ளவும் உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

# 'வாழ்க்கைத்தரத்தை உயர்த்தும் ஏற்பாடு தேவை'

## 'மருத்துவ விடுதி—மருத்துவர் பெருக்கம் பண விரயமும், பாழ் திட்டமுமேயாகும்'

நாகபுரி, பிப். 4—

"நோய் பெருக்கத்தில் மருத்துவர்களின் வாழ்க்கைப் பற்று அடங்கி இருக்கிறது,' என்ற குற்றச்சாட்டைப் பொய்யாக்க, நோய் தடுப்பில் மருத்துவர்கள் அதிக ஆர்வமும் கவலையும் கொண்டு உழைக்க முன்வர வேண்டும்."

இவ்வாறு, இங்கு நடைபெறும் அ. இ. மெடிகல் கவுன்சில் பத்தாவது மாநாட்டின் தலைமை உரையில் டாக்டர் ஏ. சீனிவாசன் குறிப்பிட்டுள்ளார்.

அவர், மேலும் கூறியதாவது:— "மருத்துவ மனைகள், பலக் குறைவை நாம் ஒப்புக்கொண்டுள்ளதின் அடையாளமாகும்," என முன்னாள் வைசிராயாக இருந்த லார்டு வேவல் ஒருமுறை கூறி இருக்கிறார். நோய் ஏற்படுவதற்கான மூல காரணத்தைக் களைவதை விடுத்து, அதிக மருத்துவ மனைகளைக் கட்டமுனைவதும், அதிகமான மருத்துவர்களைப் பயிற்றுவிக்க முயற்சிப்பதும் தவறான முறையும் வீண் செலவுமே ஆகும். எனவே மக்களின் பொதுவாழ்க்கை நிலையை உயர்த்த மருத்துவர்கள் கிளர்ச்சி செய்யவேண்டும்."

## வியட்நாமை விழுங்க அமெரிக்கத் திட்டம்?

வியட்நாமை கம்யூனிசப் 'பிடி'யினின்றும் விடுவிக்கத் தயாரிக்கப்பட்டுள்ள ஆறு அம்சத் திட்டமொன்றிற்கு அமெரிக்க அதிகாரிகள் 'மெருகு' கொடுத்து வருவதாகக் கூறப்படுகிறது.

வியட்நாமை கம்யூனிசத்தினின்றும் விடுவிக்க 50 சதவிகித சாத்தியக் கூறுகள் இருப்பதாக வியட்நாமிலிருக்கும் ஐசனோவரின் விசேட பிரதிநிதி கூறியிருக்கிறார்.

1½ லட்சம் பேரைக் கொண்ட இராணுவம் ஒன்றை அமைப்பது—துரிதமான நிலச் சீர்திருத்தம்—அகதிகளின் துரித புனரமைப்பு—பொருளாதார நிலைக்கு முயற்சி—பிரதிநிதித்துவ அரசாங்கத்திற்கான ஏற்பாடு—பிரபுக்களின் கலகப் படையினருக்கு மன்னிப்புக் கொடுத்தோ, அல்லது அவர்களின் கோட்டைகளை எல்லாம் ஒழித்தோ சலசப் படைகளை ஒழிப்பது—இவைதான் அமெரிக்காவின் 6 அம்சத் திட்டமாகும்.

தென்வியட்நாமில் நிலவி வரும் தற்போதைய போக்கு நீடித்துக் கொண்டே வருமானால், அங்குள்ள மக்கள் கம்யூனிசத்திற்கு எதிராகவே வாக்களிப்பார்கள் என்று வாஷிங்டனிலுள்ள அதிகாரிகள் பலர் கருதுகின்றனராம்.

## கல்வியை வீணாக்காதே!

இந்திய அரசியல் சட்டம் 6 முதல் 14 வயது வரை உள்ள குழந்தைகளுக்கு இலவசக் கல்வி வசதியளிக்கிறது.

மலபாரில் பள்ளி செல்லும் குழந்தைகளில் 95 சதவிகிதத்தினர் ஆரம்பப் பள்ளிகளில் சேர்க்கப்பட்டாலும்கூட,35 அல்லது 45 சதவிகிதத்தினர்தான் அவர்கள் 14 வயதாகியிருக்கும்போது மூன்றாம் படிவம் (எட்டாம் வகுப்பு) செல்கின்றனர்.

"ஆசிரியர்கள், கல்வியில் வீண் எதுவும் இருக்கக்கூடாது என்பதை உணர வேண்டும்; கீழ் வகுப்புகளில் சேரும் கல்லாக் குழந்தைகளும் 14 வயதாவதற்குள் அடுத்த மேல் வகுப்புக்குச் செல்வதற்கான வழிவகைகளைக் காண வேண்டும்,"

என்று காரைக்குடி அழகப்பா கல்லூரித் தலைவரான ஏ. என் தம்பி, கோழிக்கோடில் உள்ள சர்க்கார் ஆண்கள் பயிற்சிப் பள்ளி விழாவில் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

## செய்தித் தாள் அச்சடிக்கும் காகிதம் உற்பத்தி

### வடநாட்டில் தொழிற்சாலை

மத்தியப் பிரதேச மாநில அரசாங்கத்தின் உதவியுடன் ரூ. 6 கோடி செலவில் நிர்மாணிக்கப்பட்டுள்ள இந்தியாவின் முதல் 'செய்தித் தாள்' காகித உற்பத்தித் தொழிற்சாலையான நேபா ஆலையில் இறக்குமதி செய்யப்பட்ட ரசாயன காகிதக் குழம்பு கொண்டு காகித உற்பத்தி துவங்கிவிட்டதாகத் தெரிகிறது.

சந்தினி எனுமிடத்தில் உள்ள இந்த ஆலையில் உற்பத்தியாகியுள்ள மாதிரி காகிதம் முக்கியமான எல்லா பத்திரிகைகளுக்கும் ஒரு நாள் இதழுக்குத் தேவையான அளவு அனுப்பப்பட்டு, அந்தக் காகிதத்தின் தரம்பற்றி, கருத்து தெரிந்து கொள்ளப்படவிருக்கிறதாம்.

இந்த ஆலை தனது முழு உற்பத்தியைத் துவங்கும் நேரத்தில், தினம் 100 டன் காகிதம் உற்பத்தி செய்யுமாம், இது இப்போது இந்தியாவில் உபயோகிக்கப்படும் செய்தித் தாள் அச்சடிக்கும் காகிதத்தின் அளவில் மூன்றில் ஒரு பங்குத் தேவையைப் பூர்த்தி செய்யும் என்றும் சொல்லப்படுகிறது.

## மாணவியிடம் மண்டலாதிபதி மன்னிப்பு!

வாஷிங்டனிலுள்ள பள்ளி மாணவியிடம் அமெரிக்க ஜனாதிபதி ஐசனோவர் மன்னிப்பு கேட்டுக் கொண்ட செய்தியொன்று வெளியாகியிருக்கிறது.

கடந்த ஜனவரி திங்கள் 6-ந் தேதியன்று, ஐசனோவர், அமெரிக்கக் காங்கிரஸ் கூட்டத்தில் பேசிய பேச்சுக்கள் எல்லா பள்ளிக்கூடங்களிலும் ஒலி பரப்பப்பட்டது; அப்போது வாஷிங்டனிலுள்ள ஒரு பள்ளியில் சரித்திர வகுப்பின்போது, ஒலிபரப்பப்பட்ட அவரது பேச்சுக்களை மாணவர்களனைவரும் கேட்டுக்கொண்டிருக்கும்போது, ஒரு மாணவி மட்டும் மற்றொரு மாணவியிடம் பேசிக் கொண்டிருந்தாராம்; இந்தக் குற்றத்திற்குத் தண்டனையாக ஆசிரியர், ஜனாதிபதியின் முழுப் பேச்சையும் எழுதித் தரவேண்டுமென்று அம்மாணவிக்கு உத்தரவிட்டாராம்.

அந்த உத்தரவுப்படி மேற்படி மாணவி, சுமார் 7,700 வார்த்தைகள் கொண்ட ஐசனோவரின் நீண்ட சொற்பொழிவையும் ஒரு வார காலமாக கை ஒடிய எழுத நேர்ந்ததும் இதனால் தாம் அடைந்த வெறுப்பைத் தெரிவிக்கும் வகையில், அம்மாணவி, ஜனாதிபதியின் சொற்பொழிவை அப்படியே ஜனாதிபதிக்கு அனுப்பியதாகக் கூறப்படுகிறது.

தமது சொற்பொழிவு இவ்வளவு நீண்டிருப்பது குறித்து வருத்தம் தெரிவித்து மேற்படி மாணவியிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு ஐசனோவர் பதில் தந்ததாகக் கூறப்படுகிறது.

சிந்திரியில் இரசாயன உர உற்பத்தியை விரிவாக்குவதற்காக சர்க்கார் அனுமதியளித்துள்ள திட்டத்தின் பலனாக சிந்திரியின் உற்பத்தி சக்தி சுமார் 60 சதவிகிதம் அதிகரிக்குமெனஎதிர்பார்க்கப்படுகிறது.



# விவசாயத்தை நம்பியதின் விளைவு

## சொந்த நாட்டின் நலன்கள் புறக்கணிக்கப்படுவதின் எதிரொலி

### திரு-கொச்சி விவசாயிகள் பிழைப்பு தேடி போபால் செல்லுகின்றனர்

போபாலில் அமைக்கப்படும் 10,000 ஏக்கர் பரப்புள்ள பண்ணையில் இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலுமிருந்தும் நிலமில்லாத 1,000 ஏழை விவசாயி குடும்பங்கள் குடியமர்த்தப்பட இருக்கின்றன.

இந்த ஏற்பாடுகளைச் செய்ய இந்திய சர்க்கார் விவசாய இலாகா அமைச்சர் டாக்டர் பி. ஆர். தேஷ்முக் தலைமையில் கூடி இறுதியாகச் செய்யவேண்டிய காரியங்கள் பற்றி யோசித்தனர். இக்கூட்ட முடிவில் நிருபர்களிடையே பேசுகையில் திட்டக் குழுவின் ஆலோசகரான மூன், உடனடியாக போபாலிலிருந்தும், திரு-கொச்சியிலிருந்தும் முறையே 100 குடும்பங்களை குடியமர்த்த தேவையான ஏற்பாடுகள் அனைத்தும் முடிவுற்றன என்று கூறினார்.

சுல்தான்பூர் என்னுமிடத்தில் இப்பண்ணை அமைக்கப்படும். திரு-கொச்சியிலிருந்து 100 விவசாயக் குடும்பங்களும் இம்மாத மத்தியில் வந்து சேர்வார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இவர்களுக்கு இயந்திர சாதனங்களைப் பயன்படுத்தப் பயிற்சி அளிக்கப்படுமாம்.

முதல் இரண்டாண்டு காலத்திற்கு இவர்கள் தினக் கூலியில் வேலை பார்ப்பார்களாம்.

இரண்டாவது ஆண்டு முதல் ஐந்தாவது ஆண்டுவரை குறைந்த பட்சக் கூலி என்று நிர்ணயித்துக் கொடுக்கப்படுமாம். அத்துடன், பண்ணையில் கிடைக்கும் லாபத்தில் மூன்றில் ஒரு பங்கும் கொடுக்கப்படும். ஆறாவது ஆண்டிலிருந்து நிரந்தரக் குடியானவர்களாக இருப்பர்.

ஒவ்வொரு குடும்பத்திற்கும் 10-ஏக்கர் நிலம் அளிக்கப்படும். ஏக்கர் ஒன்றுக்கு ரூ 50 வீதம், தவணைகளில் இவர்களிடமிருந்து பெற்றுக் கொள்ளப்படும்.

இவர்களுக்குத் தேவையான விவசாயக் கருவிகள் வாங்கப்பட்டுவிட்டனவாம். இவர்களுக்காக 100 வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன. மேற்கொண்டு வீடுகள் கட்டவும் ஏற்பாடுகள் நடைபெறுகின்றனவாம்.

## விளைச்சல் போட்டியில் பரிசு

### தனது விவசாய முறை விளக்கம்

சென்னை, பிப். 4—

சென்னை மாநில சர்க்காரால் நடத்தப்பட்ட 1953—54-ம் ஆண்டின் விளைச்சல் போட்டியில் முதல் பரிசு பெற்ற எம். அச்சுதன் என்பவரைப் பாராட்டி 1-ந் தேதி மாலை, சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடைபெற்ற விழா ஒன்றின்போது, சென்னை முதலமைச்சர் காமராசர் தங்கப் பதக்கம் ஒன்றை வழங்கினார்.

பரிசு பெற்ற மேற்படி நபர் மலபார் மாவட்டத்திலுள்ள வைநாடு தாலுகாவைச் சேர்ந்த ஆட்த்தோடு எனும் கிராமவாசியாவார். அவர் ஒரு ஏக்கர் நிலத்தில் 8,207 ராத்தல் நெல் விளைவித்திருக்கிறார்.

தமக்களிக்கப்பட்ட பாராட்டுதலுக்கும், பரிசுக்கும் நன்றி தெரிவித்துப் பேசுகையில் அச்சுதன், தாம் பயிரிட்ட முறையை விளக்கினார்:—

"அதிகப்படியான நிலத்தைச் சாகுபடிக்குக் கொண்டு வருவதின் மூலமோ அல்லது சீர்திருத்த சாகுபடி முறைகளைக் கையாளுவதின் மூலமாகவோதான் உணவு தானிய உற்பத்தியைப் பெருக்க முடியும்; விளைச்சல் போட்டிகளெல்லாம் விவசாயிகளுக்கு வேண்டிய ஊக்கத்தைக் கொடுக்கிறது. அது, பரிசுத் தொகை பெறுவதற்காக மட்டும் அல்லாமல், சிறந்த சாதனைகளையும் காட்டவேண்டுமென்ற ஆர்வத்திற்காகத்தான்" என்றும் குறிப்பிட்டார்.

மேலும் அவர், தாம் கையாண்ட வழி முறைகளைக் குறிப்பிடுகையில் நாற்று நடுவதற்காக எடுத்துக் கொண்ட 10 செண்டு நிலத்தையும் 16 தடவை நன்றாக உழுததாகவும்; அந்நிலத்திற்கு, 600 பவுண்டு பசுந்தழை உரமும், 500 பவுண்டு சாதாரண உரமும் உபயோகித்து, 21 பவுண்டு விதைகளைப் போட்டு, பின்னர் 3 வாரங்களுக்குப்பின் 10 பவுண்டு 'அமோனியம் சல்பேட்' உரம் போட்டதாகவும் கூறினார்.

பின்னர், மறுபடியும் நாற்று நடுவதற்கு நிலத்தை 20 தடவை நன்றாக உழுது 500பவுண்டு பசுந்தழை உரம், 10 வண்டி கம்போஸ்ட், 6 வண்டி மல உரம், 336 பவுண்டு சூப்பர் பாஸ்பேட், 5 மூட்டைகள் சாம்பல்,150 பவுண்டு அமோனியம் சல்பேட் 320 பவுண்டு கடலெண்ணெய் பிண்ணாக்கு ஆகியவை போட்டு 50 நாட்கள் கழிந்த பின்னர், நாற்றுகள் ஒவ்வொன்றும் 6 அங்குலம் இடம்விட்டு நடப்பட்டன; பின்னர் களை எடுத்தபின், ஏகருக்கு 150 பவுண்டுவீதம் அமோனியம் சல்பேட் போடப்பட்டது; பயிர்கள் கீழே விழாமல் தடுக்க 4 அடி அகலம் விட்டு கயிறுகட்டப்பட்டது; இப்படிச் செய்யப்பட்ட பின்னர், 210 நாட்களில் பயிர் அறுவடைக்குத் தயாராயிற்று; மாவட்ட அதிகாரிகளின் முன்னிலையிலேயே பயிர் அறுவடையும் நடைபெற்றது என்று மேலும் அவர் கூறினார்.

மொத்தம் அவருக்கு அறுவடையானது 8207 ராத்தல் நெல்; அன்றைய மார்க்கெட் நிலவரப்படி அந்த நெல்லுக்கு விலை ரூபாய் 1,718—8—0 ஆகும். அவருக்கு சாகுபடிக்கான மொத்தச் செலவு ரூ. 685; கிடைத்த நிகர லாபம் ரூ. 1,032—8—0 ஆகும்.

## கூட்டுறவு இயக்க - வளர்ச்சி ஆராய!

### எட்டு நபர் கொண்ட ஆய்வுக் குழு

சென்னை மாநில கூட்டுறவு இயக்கத்தின் நடவடிக்கையையும், செய்யப்பட வேண்டிய முன்னேற்றங்களையும் ஆராய்ந்து உணர்த்துவதற்கு, எட்டு நபர்களைக் கொண்ட ஆய்வுக் குழு ஒன்றை சென்னை அரசாங்கம் நிறுவி இருக்கிறது.

குழுவில் அரசாங்கத் தொடர்பற்ற சாதாரண குடிமக்கள் எழுவரும், கூட்டுறவு சங்கங்களின் ரிஜிஸ்டிரார் ஏ. பழனியப்ப முதலியார் அவர்களும் நியமனம் பெற்றிருக்கின்றனர்.

## அரிசி ஏற்றுமதி

### எல்லா துறைமுகங்களிலிருந்தும் அனுமதி

இதுவரை பம்பாய், கல்கத்தா ஆகிய துறைமுகங்களிலிருந்து மட்டுமே அரிசி ஏற்றுமதி செய்வது என்ற நிலையை மாற்றி, இப்போது எல்லா துறைமுகங்களிலிருந்தும் ஏற்றுமதி செய்ய அனுமதிப்பது என்று இந்திய சர்க்கார் முடிவு செய்திருக்கின்றனராம்.

அதேபோது, அரிசி ஏற்றுமதிக்கான தீர்வையையும் சர்க்கார் குறைத்துள்ளதாம். அரிசி விலை மதிப்பின்மீது 20 சதவிகிதமாக இருந்த ஏற்றுமதித் தீர்வையை மணங்கு ஒன்றுக்கு 0—2—3 என்று மாற்றியிருக்கிறது என்றும் தெரிகிறது.

## புதிய அரிசி வகை உற்பத்தி

ஐதராபாத், பிப். 2—

ஐதராபாத் மாநிலத்தில் உள்ள ஹிமாயத் சாகர் எனும் இடத்திலிருக்கும் சர்க்கார் விவசாய ஆராய்ச்சிக்கூடத்தில், உலகத்தின் பல்வேறு பிரதேசங்களிலுமுள்ள 13 நாடுகளிலிருந்தும் கொண்டு வரப்பட்ட 122 வகை அரிசி பரிசோதனை செய்யப்படுகின்றதாம்.

'ப்ளாஸ்ட்' என்று கூறப்படும் ஒருவகை 'வியாதி' அரிசியைப் பீடிக்காது தாங்கிக்கொள்கிற வகையில் புதிய அரிசிவகை ஒன்றை உற்பத்தி செய்யவே இந்த ஆராய்ச்சி நடக்கிறதாம்.

இந்தோனேஷியா, இலங்கை ஆகிய நாடுகளிலிருந்தும் குறிப்பாக இந்தோனேஷியாவிலிருந்தும் வந்துள்ள அரிசியே ஐதராபாத் நிலைகளுக்கு உகந்ததாயிருக்குமென சர்க்கார் அதிகாரி ஒருவர் கூறியிருக்கிறாராம்.

## உர உற்பத்தி

சென்னை, பிப். 3—

உர உற்பத்திக் குழு நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத்திற்குச் சென்று அங்கு உர உற்பத்திக்கானவாய்ப்புகள் பற்றி ஆராய்ந்தறிவர் என்று தெரிகிறது.

## கடலை எண்ணெய் ஏற்றுமதி

### அதிகமாக்க இந்திய சர்க்கார் அனுமதி

புதுடில்லி, பிப். 5—

வரும் மார்ச்சு 31-ந் தேதிக்குள் இன்னும் அதிகமான அளவு கடலை எண்ணெயை ஏற்றுமதி செய்வதற்கு அனுமதிக்க மத்திய சர்க்கார் முடிவு செய்துள்ளதாம்.

இந்த ஏற்றுமதிக்கான அனுமதி அங்கீகரிக்கப்பட்ட ஏற்றுமதியாளர்கள், எண்ணெய் ஆட்டுவோர்கள் ஆகியோருக்கே தரப்படும்.

சதவிகித அடிப்படையிலேயே அனுமதி இருக்குமாம்.

'எக்ஸ்பெல்லர்' வகையைச் சேர்ந்த 25,000 டன் கடலைப் பிண்ணாக்கையும் ஏற்றுமதிசெய்ய, 1955 மார்ச் மாதத்தில் அனுமதிப்பது என்றும் முடிவாகியுள்ளதாம்.

# பெப்சு சட்டசபை காங்கிரஸ் கட்சியில் தலைவர் பதவிக்கு லடாய்!

### தீர்த்துவைக்க பண்டித பந்த் வருகிறாராம்!

பெப்சு மாநில சட்டசபை காங்கிரஸ் கட்சித் தலைவர் தேர்தலை நடத்திவைக்க மத்திய மந்திரி பண்டித கோவிந்த வல்லபபந்த் வருவார் எனத் தெரிகிறது.

பிரிஷ்பன் என்பவரை தலைவராக முதன் மந்திரி நியமித்திருப்பதை ஆவடியில் கூடிய காங்கிரஸ் மாநாட்டின்போது காங்கிரஸ் பார்லிமெண்டரி குழு அங்கீகரித்திருந்தும்கூட நிலவரி இலாக்கா மந்திரியான ஹரிசரண் சிங் குழுவினர் அவரது தலைமையைஏற்றுக்கொள்ள மறுத்துவருகின்றனராம்.

ஹரிசரண் சிங், நிருபர் ஒருவரிடம் பேசுகையில், இந்த விஷயத்தில் காங்கிரஸ் மேலிடம் தலையிடுவதென்ற கேள்வியே எழவில்லை என்று கூறியிருக்கிறார்.

அவரை ஆதரிக்கும் குழுவினர், அவர் இல்லத்தில் கூடி விவாதித்திருக்கின்றனர்.

அவர்கள் ரெவினியூ மந்திரிக்குப் பதிலாக, சில 'காரணங்களுக்காக' வேறு ஒருவரை கட்சித் தலைவர் பதவிக்குப் போட்டியிட நிறுத்துவார்கள் என்றும் கூறப்படுகிறது.

# 'குறுக்கெழுத்துப் போட்டிகள் சமூகத்திற்கு பெரும் ஆபத்தாகும்'

## காங்கிரஸ் தலைவர் தேபர் கருத்து

பம்பாய், பிப் 4—

"குறுக்கு வார்த்தைப் போட்டி எல்லா வழிகளாலும், ஒரு பெரும் சமூக ஆபத்தாகி விட்டது,"

என்று, காங்கிரஸ் தலைவர் யூ. என். தேபர் குஜாராத்தி மாத இதழ் ஒன்றிலிருந்து வந்த கேள்விக்குப் பதிலளிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்.

"உழைப்பிலிருந்து தப்புவதற்காக இடைவிடாது தொடர்ந்து வழி தேடும் ஒரு சமூகம், இறுதியில் சூதாட்டம், கத்தா வியாபாரம் இவற்றில் போய் நிற்க வேண்டி வரும். படித்த மக்கள் இதில் சேராமல் அடியோடு ஒதுங்கி நின்று பிறருக்கு நல் வழி காட்டுபவர்களாயிருக்க வேண்டும்; படித்தவர்கள், குறுக்கெழுத்துப் போட்டியை நடத்துபவர்களுடனோ அவர்களுடன் சம்பந்தப்பட்டவர்களுடனோ கலந்துகொள்ள மறுக்கவேண்டும்; சட்டம் மூலம் மட்டும் எந்த ஒரு சீர்திருத்தத்தையும் செய்துவிட முடியாது. சட்டம் மூலம் குறுக்கெழுத்துப்போட்டிகளைத் தடுத்து மக்களுடைய ஆதரவுள்ள முறைகளைக் கையாளாதிருந்தால் இந்த நோய் நிச்சயம் வேறு வழிகளில் உருவாகும்," என்றும் தேபர் குறிப்பிட்டிருக்கிறாராம்.

★

## தடை செய்க!

சூரத், பிப். 4—

"கூர்ஜர மாநில பெண்கள் மாநாட்டில் குறுக்கு வார்த்தைப் போட்டிகள் இந்தியாவெங்கும் சிறு கிராமங்களில் கூட பரவி, நடுத்தர வகுப்பினரையும், எளிய வகுப்பினரையும் கேடுகளுக்கு ஆளாக்கி வருவதால், சர்க்கார் இதைத் தடுக்க வேண்டும்," என்று தீர்மானம் ஒன்று நிறைவேறியுள்ளதாம்.

இந்தப் பெண்கள் மாநாட்டில், மாநிலத்தின் பல பகுதிகளிலிருந்தும் 300-க்கும் அதிகமான பிரதிநிதிகள் கலந்துகொண்டனரென்று தெரிகிறது.

## துணி ஆலைகள் புனரமைப்பு

### புள்ளி விபரம் சேகரிக்க விசாரணைக் குழு

மத்திய அரசாங்க வர்த்தக, தொழில் இலாக்கா மந்திரி சபை இந்தியாவில் உள்ள ஆலைத் தொழில் பற்றி விசாரணை நடத்த இருப்பதாகத் தெரிகிறது.

ஆலைகளில் உள்ள இயந்திரங்கள், இயந்திர சாதனங்கள் ஆகியவற்றின் தற்போதைய நிலை, ஆலைகளின் பொருளாதார நிலை, இவை பற்றிய புள்ளி விவரங்களை தேவைப்படும்போது புனரமைப்புச் செய்வதற்காக, அவை பற்றிய தகவல்களைச் சேகரிப்பதற்காகவே விசாரணை மேற்கொள்ளப்படுகிறதாம்.

தொழில் நுட்ப, பொருளாதார குழுக்கள் இரண்டு இதற்காக நியமிப்பதற்கு அனுமதி தரப்பட்டுள்ளதாம். அவை இரண்டும் உடன் வேலையைத் துவக்குமாம்.

## துணிகளை ஏற்றிச் செல்ல விசேஷ ரயில்கள்

அகமதாபாத், பிப். 5—

ஏற்கனவே உள்ளவை போக, மூன்று விசேட ரயில்கள், இங்கு துரிதமாகக் குவிந்து வரும் துணிகளை ஏற்றிச் செல்வதற்காக, இம்மாத முதல்பட்சத்தில், ஏற்பாடு செய்யப்பட்டுள்ளனவாம்.

கடந்த டிசம்பரில் 50,000 பேல்களாக இருந்த ஏற்றுமதி ஜனவரியில் 72,000 பேல்களாக அதிகரித்துள்ளதாம். அதையொட்டியே விசேட ரயில்கள் விடப்படுகின்றனவாம்.

## தங்கத் தாமரை!

மதுரை, பிப். 3—

மதுரை மீனாட்சி அம்மன் கோவில் உட்புறத்திலுள்ள பொற்றாமரை வாவியில், செம்பினால் செய்யப்பட்டு, மேலே தங்கமுலாம் பூசப்பட்ட ரூ 2000 பெறுமானமுள்ள தாமரை ஒன்றை, மதுரை மாவட்ட நீதிபதி எஸ். ரங்கராஜன் நேற்று மாலை மிதக்கவிட்டிருக்கிறாராம். இத்தாமரை, அந்த வாவியின் மத்தியில் நிறுத்தப்பட்டுள்ள விளக்குக் கம்பத்தில் பொருத்தப்படுமாம்.

இந்தப் பொற்றாமரை, திருப்பனந்தாள் காசி மடாதிபதி அருள்நந்தி தம்பிரானின் நன்கொடையாம்.

இக்குளத்தில் வளர்ந்த தாமரைகளைக் கொண்டுதான் தேவேந்திரன் சிவனுக்குப் பூசை செய்தான் என்று புராணங்களிலே கூறப்படுகின்றன.

## பாழடையும் மாளிகைகள்

சென்னை, பிப். 3—

முன்னாள்ஜமீன்தார்கள், பெருந்தனக்காரர்கள் ஆகியோருக்குச் சொந்தமான மாளிகைகள் பராமரிக்கப்படாமல் பாழடைந்து வருவதை சர்க்கார் எடுத்துக்கொண்டு அவற்றை பொதுக்காரியங்களுக்கு உபயோகிப்பது குறித்து, பண்டித நேரு காமராசருக்குக் கடிதம் எழுதியிருக்கிறார் என்று ஒரு செய்தி வெளிவந்துள்ளதல்லவா?

அதன்படி, பண்டித நேருவின் யோசனை சென்னை மாநிலத்தைப் பொறுத்த வரை பயன்படாது என்று சென்னை சர்க்காரின் உயர்தர அதிகாரி ஒருவர் கருத்தறிவித்தாராம்.

சென்னை மாநிலத்தில் அப்படி ஒன்றும் பெரிய மாளிகைகள் முன்னாள் ஜமீன்களிடம் இல்லையென்றும், இருக்கிற சிலபல கட்டிடங்களும் முன்னாள் ஜமீன்தார்கள் உபயோகத்தில் இருப்பதாயும் வேண்டுமானால் வட இந்திய மாநிலங்களில் அம்மாதிரி கட்டிடங்கள் இருக்கலாமெனவும் அந்த அதிகாரி கூறியிருக்கிறார்.

மேலும், எல்லா மாநில முதன் மந்திரிகளுக்கும் அனுப்பப்பட்ட, அந்த சுற்றுக் கடிதம், இரகசியமான ஒன்றாகும்; அது எப்படி பத்திரிகைகளில் வெளிவந்தது என்பது ஆச்சரியமாயிருப்பதாயும் அவர்களுக்குத் தெரிவித்திருக்கிறார்.

## தஞ்சை மாவட்டத்தில் நீர்ப்பாசன வசதி

தஞ்சை மாவட்டத்தில் நாகப்பட்டினம் வட்டத்தில், காரப்படுகை, திருத்துறைப்பூண்டி வட்டத்தில், தலைஞாயிறு, 2-வது சேத்தி கோவில்பத்து முதலிய கிராமங்களில் சுமார் 400 கோடி ஏக்கருக்கு பாசன வசதியளிக்கக் கூடிய வகையில் ராஜன் வாய்க்கால் விஸ்தரிப்புத் திட்டத்திற்கு சென்னை சர்க்கார் அனுமதியளித்துள்ளனராம். இதற்கு மொத்தம் ரூ. 83 ஆயிரம் செலவாகும் என்று தெரிகிறது.

சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்றிவைப்பதற்காக, இந்திய சர்க்கார் 1953—54-ம் ஆண்டில் பல்வேறு மாநிலங்களுக்கும் கடனாக 16·06 கோடி ரூபாயும், மானியமாக 2·30 கோடி ரூபாயும் வழங்கியிருக்கிறார்கள்.

# ‘திராவிட நாடு’ குறித்து கவர்னர் பிரகாசா!

## நமது வலிமை குறித்து அவர் கவலை!

### ‘இந்திய சரித்திரம் முழுவதும் வடநாட்டு வரலாறே!’

### ‘அதில் தென்னாட்டு நிகழ்ச்சிகள் புறக்கணிக்கப்பட்டுள்ளன !’

### ‘தென்னாட்டவரிடமிருந்து வடவர் கற்றுக்கொள்ள வேண்டியது ஏராளம்!’

“பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் இப்போது போதிக்கப்படும் இந்திய சரித்திரம் என்பது, முழுக்க முழுக்க வட இந்தியாவில் நிகழ்ந்த சம்பவங்களையே கொண்டுள்ளது; தென்னாடு, ஏறத்தாழ புறக்கணிக்கப்பட்டுவிட்டது;

“இன்று இதனுடைய விளைவாக—நான் இதுபற்றி வெளிப்படையாகவே கூற விரும்புகிறேன்—தென்னாட்டின் மீது வட நாடு ஆதிக்கம் செலுத்துகிறது; ‘தென்னாட்டிற்கு வட நாடு தேவையில்லை’ என்ற எண்ணம் தென்னிந்தியாவில் இன்று நிலவுவது தெளிவாகத் தெரிகிறது;

“வட நாட்டிலிருந்து தென்னாட்டைப் பிரித்துவிட வேண்டுமென்பதற்காக வலுமிகுந்த இயக்கங்கள் இருக்கின்றன; இந்த நிலை கண்டு நாம் வருந்துகிறோம்; ஏனெனில், இதனால் நெடுங்காலத்திற்குப் பிறகு நாம் இப்போது பெற்றிருக்கிற இந்திய ஒற்றுமை(?)க்கு ஆபத்து ஏற்படுமென நம்மிலே பலர் உணர்கிறோம்;

“சென்னை மாநிலம் எல்லா வகையாலும் சிறந்ததாகும் என்பதை எனது வட இந்திய நண்பர்களுக்கும், இதரர்களுக்கும் சொல்ல விரும்புகிறேன்; வட இந்தியர்களாகிய நாம், சென்னையைப் பற்றி அதிகம் தெரிந்துகொள்ளாமலிருப்பது வருந்தத்தக்கதாகும்; சென்னையில் நல்ல கல்விமான்கள், சிறந்த டாக்டர்கள், சிறந்த எஞ்சினீயர்கள், விஞ்ஞானிகள் இருந்திருக்கிறார்கள்—இருக்கிறார்கள்; எனவே, சென்னை, எழுத்தாளர் உலகிலும் சிறப்புப் பெற்றிருக்கிறது என்பது நமக்கு ஆச்சரியத்தைத் தரவில்லை;

“சென்னைவாசிகள் வடக்கு நோக்கி வரும்போது மிகவும் தன்னடக்கத்துடன் இருந்துவிடுகிறார்கள்; தங்களைப் பற்றியும், சிறப்பு மிகுந்த தங்கள் மாநில பெருமை பற்றியும் அவர்கள் தற்புகழ்ச்சியாகக் கூறிக்கொள்வதில்லை;

“எனக்கு ஆண்டாண்டு காலமாய் சென்னைவாசிகள் பலர் நண்பர்களாயிருந்திருக்கின்றனர். அவர்களில் எவரும் எனக்கு சென்னை மாநிலத்தின் சிறப்புகள் குறித்து எடுத்துக் கூறியதில்லை. நான் இங்கு வந்த பிறகுதான் சென்னையைப் பற்றி உணர முடிகிறது. சென்னை மாநிலத்தவர் மனித சமுதாயத்தின் முயற்சிகளில் எத்துணை வெற்றி பெற்றிருக்கிறார்கள் என்பது இப்போதுதான் எனக்குப் புலப்படுகிறது;

“வடநாட்டிலிருந்து வந்துள்ள நண்பர்கள், தென்னாட்டின் பல பாகங்களுக்கும் சென்று அங்குள்ள பெரும் கோவில்கள், சிற்ப, சித்திரக் கலைகள் ஆகியவற்றையும் காண வேண்டும். அப்போதுதான் அவர்கள் (வட நாட்டுக்காரர்கள்) தென்னாட்டவரிடமிருந்து நாம் கற்றுக்கொள்ளவேண்டியன எவ்வளவோ இருக்கிறது என்பதையும், தென்னாட்டவருக்கு நாம் கற்றுத்தர வேண்டியுள்ளது மிகச் சிறிய அளவே என்பதையும் தெரிந்து கொள்ள முடியும்.

“இந்தப் பரந்த நாட்டின் பல பாகங்களிலும் உள்ள எழுத்தாளர்களையும், பத்திரிகையாளரையும் நான் ஒன்று கேட்டுக்கொள்வேன்—அவர்கள், தங்களுக்கிருக்கிற சந்தேகத்திற்கிடமில்லாத செல்வாக்கை, தென்னாட்டிலிருப்பவர்கள் கொண்டுள்ள எல்லா வருந்தத்தக்க எண்ணங்களையும் போக்குகிற வகையில் பயன்படுத்த வேண்டும்; இந்தியாவின் அடிப்படை ஒற்றுமை (?) யை காலாகாலத்துக்கும் நிலைநாட்ட வேண்டும்.

“தென்னிந்திய நண்பர்களுக்கு (?) நான் சொல்லக்கூடியது ஒன்று—அவர்கள், எப்போதாவது (?) வடநாட்டிலிருந்து கவர்னர்கள் நியமனம் செய்யப்படும்போது அதைப் பொறுத்துக் கொள்ள வேண்டும் என்பதுதான்; அது, பொறுத்துக்கொள்வதற்கு அவ்வளவு கடினமானதல்ல,”

—என்று, சென்னை கவர்னர் பிரகாசா, அகில இந்திய அச்சகத்தார் மூன்றாவது மாநாட்டினை, சென்னை மியூசியம் தியேட்டரில் 6—2—55 அன்று திறந்துவைத்துப் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

## பிகாரில் மீண்டும் சுரங்க விபத்து

ஜாரியா, பிப். 6—

நேற்று இங்குள்ள அம்லாபாத் நிலக்கரிச் சுரங்கத்திற்குள் திடீரென்று ஏற்பட்ட ஒரு வெடி விபத்தின் விளைவாக 55 சுரங்கத் தொழிலாளர்கள் கொல்லப்பட்டனர் என்று செய்திகள் அறிவிக்கின்றன.

விபத்தில் கொல்லப்பட்டவர்களின் எண்ணிக்கை நிச்சயமாகத் தெரியவில்லையாம். தகவல் கிடைத்ததும் சுரங்க அதிகாரிகள் உட்பட மற்ற அதிகாரிகளும் விரைந்து, மீட்சி வேலையைக் கவனித்தனர் என்று தெரிகிறது.

இந்த விபத்து நிகழ்வதற்கான காரணம் என்ன என்று தெரியவில்லையாம். ஆனால், ஏதாவது ஒரு விஷ வாயுவினால் மேற்படி வெடி விபத்து ஏற்பட்டிருக்கலாம் என்று யூகிக்கப்படுவதாகவும் கூறப்பட்டுள்ளது.

## சியாங் படை திரும்புகிறது!

தைப்பே (பார்மோசா) பிப். 7—

செஞ்சீனப் பிரதேசத்திற்கருகில் சியாங் சர்க்கார் (தேசியச் சீனு) வசமுள்ள டாச்சென் தீவுகளிலிருந்து தேசியச் சீன துருப்புக்களையும், மற்றும் மக்களையும் (சிவிலியன்கள்) வெளியேற்றுவதற்கென அமெரிக்கப் போர்க் கப்பல்களும் விமானங்களும் அடங்கிய படையொன்று அத்தீவைச் சுற்றி அணிவகுத்து நிற்பதாகச் செய்திகள் அறிவிக்கின்றன.

டாச்சென் தீவுகளுக்கு வந்துள்ள மொத்தப் படையில் 30 - தேசீய சீன போர்க் கப்பல்களும், படை இறக்கத்திற்கு உபயோகிக்கப்படக்கூடிய படகுகளும், 15 - அமெரிக்க போர்க் கப்பல்கள், நாசகாரிகள்; விமானந் தாங்கிக் கப்பல்களும், 300 விமானங்களும் வந்துள்ளன.

டாச்சென் தீவுமீது மேற்கொள்ளப்படும் எந்த ஒரு தாக்குதலும், அமெரிக்காவின் 7-வது கடற்படை மேற்கொண்டிருக்கும் பணியில் தலையிடுவதாகக் கருதப்படும் என்று அமெரிக்க பாதுகாப்பு இலாகா உயர்தர அதிகாரி ஒருவர் கூறியிருக்கிறாராம். கம்யூனிஸ்டுகள் இத்தீவைத் தாக்கினால், அவர்களை எதிர்த்துப் போரிட்டு சுட்டு வீழ்த்த அப்படைகளுக்கு உத்தரவு அளிக்கப்பட்டுவிட்டதாம்.

### திருக்குறள் வகுப்பு

8—2—55 பிற்பகல் 2-30 மணிக்கு, சென்னை, முத்துகிருஷ்ணன் தெரு, 15-ம் எண்ணுள்ள இல்லத்தில், தாய்மார் கழகச் சார்பில் ‘அருளுடைமை’ என்பது குறித்து, தோழர் மயிலை சிவமுத்து, தோழியர்கள் அலமேலு அப்பாதுரை, தாமரைக்கண்ணி ஆகியோர் பேசுவர்.

### திருமணம்

9—2—55 காலை 6 மணிக்கு, சென்னை, பெரம்பூர் பாரெக்ஸ், எண் 42, ஸ்ட்ராஹான்ஸ் ரோடில், தோழர் எஸ். எல்லப்பன்—தோழியர் சரோசா திருமணம், தோழர் என். வி. நடராசன் தலைமையில் நடைபெறும். மணமக்களைப் பாராட்டி தோழர்கள் கண்ணதாசன், மோ. பெ இமயவரம்பன் ஆகியோர் பேசுவர்.

## வட நாட்டில் மட்டுமே தொழிற்சாலைகளை அமைக்காதீர்!

### அங்கு மட்டுமே செல்வம் குவியும் நிலை கூடாது

### திராவிடத்தைப் புறக்கணித்தால் காங்கிரசின் செல்வாக்கு அழியும்

### நிதி அமைச்சர் சுப்பிரமணியம் எச்சரிக்கை

“பெரும் தொழிற்சாலைகளை தென்னாட்டிலும் அமைக்க வேண்டும்; ஒரு குறிப்பிட்ட பகுதியில் தொழிற்சாலைகளை அமைப்பதால் அப்பகுதிகளில் மட்டும் செல்வம் குவியவும், அதே நேரத்தில் தென்னாட்டில், நாம் விரும்பாத, நமக்கு விரோதமான அரசியல் விளைவுகளும் ஏற்படும்,” என்று சென்னை நிதி அமைச்சர் குறிப்பிட்டிருக்கிறார்.

“முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் குறிப்பிட்ட அளவு வெற்றியைத் தந்திருக்கிறது; ஆகவே, திட்டக் குழுவினர் அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்தை இன்னும் விரிவான முறையில் தயாரிக்க வேண்டும்,” என்று சென்னை நிதி அமைச்சர் சுப்பிரமணியம் கோவையை அடுத்த பெரியநாயகன்பாளையத்தில் நடைபெற்ற ஐந்தாண்டுத் திட்ட விவாத அரங்கில் பேசுகையில் எடுத்துச் சொன்னார்.

“முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அமுலசெய்யப்பட்ட பெரும் நீர்ப்பாசனத் திட்டங்கள் எல்லாம், சாதகமான முறையில் அமைந்துள்ள குறிப்பிட்ட பிரதேசங்களுக்கே பலன் தந்திருக்கிறது,” என்று அவர் குறிப்பிட்டார்.

“ஆகவே, அடுத்த திட்டத்தின் முக்கிய நோக்கம், 5,000 மக்கள் கொண்ட கிராமம் ஒவ்வொன்றுக்கும் ஆரம்பப் பள்ளி ஒன்று, குடி தண்ணீர் வாய்ப்பு, நல்ல சாலைகள், ஐந்து சதுர மைலுக்குள் சுகாதார நிலையம் இவற்றை அமைப்பதாக இருக்க வேண்டும்,” என்று அவர் குறிப்பிட்டார்.

தென்னாட்டில் நீர்வளம் மிகுதியாக இருப்பது பற்றி குறிப்பிட்டு, அவற்றை தெற்கே உள்ள நாடுகள் அனைத்தும் பயன்படுத்துவதற்கு வழிகாண வேண்டுமென்றார்.

“மூலப் பொருள்கள் கிடைக்கும் இடத்திற்கு அருகிலேயே பெரும் தொழிற்சாலைகளை அமைப்பது என்ற கொள்கையை அப்படியே பின்பற்றினால், சாதகமானமுறையில் அமைந்துள்ள குறிப்பிட்ட பகுதிகளில் செல்வம் குவியும் நிலைமை ஏற்படும்; அதனால் நாட்டில் காணப்படும் அரசியல் சூழ்நிலையில் (நமக்கு) எதிர்மாறான விளைவுகள் ஏற்படும்,”

என்றும் சுப்பிரமணியம் கூறினாராம்.

“ஆகவே, தென்னாட்டிலும் சில பெரிய தொழில்களை - மின்சார சாதனங்களைத் தயார் செய்யும் தொழிற்சாலைகள் போன்றவைகளை அமைப்பது பொருத்தமானதாகும்,”

என்றும் அவர் குறிப்பிட்டார்.

‘தென்னாட்டில் கிடைக்கும் இரும்பைப் பயன்படுத்தி, நெய்வேலி நிலக்கரியை அடிப்படையாகக் கொண்டு, இரும்புத் தொழிற்சாலை ஒன்றை தென்னாட்டில் அமைப்பது பற்றிய வாய்ப்புக்களை திட்டக் குழு பூரணமாக ஆராயுமென்று நான் நம்புகிறேன்; இதன் மூலம் தென்னாட்டின் இரும்பு-எஃகுத் தேவைகளை இங்கேயே உற்பத்தி செய்துகொள்ளும் நிலை ஏற்படும்,’’

என்று, அவர் மேலும் குறிப்பிட்டார்.

தென்னாட்டின் மிகப் பெரிய குடிசைத்தொழிலான கைத்தறி நெசவுத் தொழிலைப் பாதுகாப்பது அவசியம் என்றும், இல்லையேல், இத்தொழிலில் பரம்பரையாக இருப்போர் வேலையில்லாது உள்ளவர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்துவார்கள் என்றும், நிதிஅமைச்சர் குறிப்பிட்டாராம்.

## பிரான்சில் பிற்போக்கு - வாதிகள் கூத்தாட்டம்

### மெண்டே பிரான்சின் வீழ்ச்சி!

### 21-வது மந்திரி சபை அமைகிறது!

பாரிஸ், பிப். 6—

தனது வெளிநாட்டுக் கொள்கைக்கு ஆதரவு தெரிவிக்கும் வகையில் பிரதமர் மெண்டே பிரான்ஸ் கொண்டுவந்த நம்பிக்கைத் தீர்மானம் தேசிய சட்டசபையில் தோற்றுப்போய்விட்டதை ஒட்டி, மெண்டே பிரான்ஸ் தனது பிரதமர் பதவியை இராஜினாமாச் செய்துவிட்டார்.

யுத்தத்திற்குப் பிறகு 20-வது மந்திரிசபையின் தலைவராக அவர் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். அவர் பதவியிலிருந்த எழு மாத காலத்தில், இந்தோ-சீனப் போர் நிறுத்தம், இந்தியத் துணைக் கண்டத்தில் புதுவை - காரை பகுதியை விட்டு வெளியேறுதல், அல்ஜீரியா, டுனீசியா, மொராக்கோ ஆகிய காலனிகளுக்கு சுயாட்சி வழங்குவதில் தீவிரமாயிருத்தல் இவை போன்றவற்றில் அதிகமான அக்கறை காட்டி சிறப்பான பணிபுரிந்திருக்கிறார்.

யுத்த காலத்திற்குப் பிறகு அமைந்த வேறெந்த மந்திரி சபையும் எழு மாதகாலம் நீடித்திருந்ததில்லை.

### புது மந்திரி சபை அமைகிறது

பிரான்சின் குடியரசுத் தலைவர் எம். ரனே கோட்டி, மெண்டே பிரான்சின் ராஜினாமாவையொட்டி எம். அந்தோனி பினே என்பவரை 21-வது மந்திரி சபை அமைக்குமாறு கோரியிருக்கிறார் என்று தெரிகிறது.

பினே, எல்லாக் கட்சித் தலைவர்களையும் கலந்தாலோசித்து, வரும் செவ்வாயன்று மந்திரி சபை அமைப்பு பற்றி இறுதி முடிவு எடுப்பார் என்று தெரிகிறது.

✯

### நேரு செல்லமாட்டார்!

காமன்வெல்த் பிரதமர்கள் மாநாட்டில் கலந்து கொண்டுவிட்டு தாயகம் திரும்புகையில் பிரதமர் நேரு பிரெஞ்சுத் தலைநகரான பாரிசுக்கு வருகை தருவதாயிருந்தார். ஆனால் இப்போது அங்கு ஏற்பட்டுள்ள மந்திரி சபை நெருக்கடியின் காரணமாக, அங்கு பண்டித நேரு செல்லமாட்டார் என்றும் தெரிகிறது.

அவர் இம்மாதம் 17-ந் தேதி தாயகம் திரும்புகிறார்.

## விமான விபத்து

லாகாஸ், பிப். 6—

கிழக்கு நைஜீரியாவில் உள்ள எனுகு, கலாபர் எனும் இடங்களுக்கிடையில் மேற்கு ஆப்பிரிக்க ஆகாய விமான கார்ப்பரேஷனைச் சேர்ந்த விமானம் ஒன்று விழுந்து நொறுங்கியதினால் ஏற்பட்ட விபத்தில் 3 விமானிகள் உட்பட 13 - பேர் கொல்லப்பட்டனர் என்று தெரிகிறது.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: சி. என் அண்ணாதுரை, எம்.ஏ.

